[20th January 1961

சொல்லப்பட்டிருக்கிறது. சர்க்கார் அவர்களிடமிருந்து நேரிடை யாக வாங்கி விற்கவில்லை என்றாலும் பாதிக்கப்பட்ட விவசாயி களுக்கு ஏதாவது உதவி செய்ய சர்க்கார் என்ன யோசித்திருக் கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில சமயங்களில் உருளைக்கிழங்கு விலை அதிகம் ஆகிறது. அப்பொழுது அதிக லாபம் வருகிறது. குறைந்தால் நஷ்டம் ஏற்படலாம், இல்லை நஷ்டம் இல்லாமல் லாபம் குறையலாம், இதற்கெல்லாம் அப்போ தைக்கப்போது அரசாங்கம் ஈடு செய்வது என்று எதிர்பார்க்க முடியாது.

SRI B. K. LINGA GOWDER: Is there any proposal before Government to fix a minimum price for potatoes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: There is no such proposal before Government.

*Co-operative Spinning Mills*

* 32 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எத்தனை கூட்டுறவு நூற்பு மில்கள் ஏற்படுத்தப்படும் ?

THE HON. SRI R. VENKATARAMAN: In the Draft Third Plan for the State, provision has been made for the establishment of four co-operative spinning mills. They are only tentative at this stage.

SRI S. M. ANNAMALAI : வடாற்காடு மாவட்டத்தில் வந்த வாசியில் ஒரு நூற்பு மில் ஆரம்பிக்கப்படவேண்டுமென்று சர்க்காருக்கு கோரிக்கை வந்திருக்கிறதா ? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அதை ஆரம்பிக்க முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பலவிடங்களிலிருந்து அந்த விதமான கோரிக்கைகள் வந்திருக்கின்றன. எந்தயிடத்தில் என்று இன்னும் நிர்ணயம் செய்யப்படவில்லை.

SRI A. VEDARATHNAM : இந்த நான்கு மில்களை எந்தெந்த இடத்தில் ஏற்படுத்த உத்தேசித்திருக்கிறது. தஞ்சை ஜில்லாவில் ஏதாவது இந்த நூற்பு பஞ்சாலைகள் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN: தஞ்சை ஜில்லாவில் 12,000 கதிர்கள் கொண்ட ஒரு மில் இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு சாங்ஷனாகியிருக்கிறது என்று சந்தோஷத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். I want to add that it is in the private sector and not in the public sector.

20th January 1961]

**Sri V. SUBBIAH** : இந்த ராஜ்யத்தில் நீண்ட இழைகள் உள்ள கதிர்கள் உற்பத்தியாகும் இடத்தில் இப்பேர்பட்ட மில்கள் ஏதாவது வைக்க அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கோவில்பட்டியிலும் மில் இருக்கிறது. அந்தப் பகுதியில் அதிகம் இருக்கிறது. ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒரு கூட்டுறவு மில் இருக்கிறது, ராஜபாளையத்திலும் இருக்கிறது.

**Sri T. KARIA GOUNDER** : கனம் சபாநாயகர் அவர்களே, வந்தவாசியில் ஒரு நூற்பு ஆலை ஆரம்பிக்கப்போவதாக செய்தி பத்திரிகையில் வெளிவந்தது சர்க்காருக்குத் தெரியுமா ? அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : என்னுடைய பதிலில் " These proposals are tentative " என்று சொன்னேன். எந்த இடத்தில் அமைக்கப்படும் என்று இன்னும் சொல்லப்படவில்லை. பல இடங்களிலிருந்தும் மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன.

**Sri A. GOVINDASAMY** : இதற்கான மனுக்கள் எந்தெந்த இடங்களிலிருந்து வந்திருக்கின்றன? தனியார் துறையில் ஆரம்பிக்கப்படவிருப்பதையும் சேர்த்து கணக்கிட்டுத்தான் சர்க்கார் இந்த விபரங்களை கொடுக்கிறார்களா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : சர்க்கார் துறையில் டெக்ஸ்டைல் மில் ஆரம்பிக்கவேண்டும் என்ற உத்தேசம் இப்போது கிடையாது. இந்த மில்களை எல்லாம் கூட்டுறவு முறையிலும் தனியார் துறையிலும் ஆரம்பிப்பதாகத்தான் இருக்கிறது. இது எந்த மாவட்டத்தில் ஆரம்பிக்கப்படும் என்று இப்போது சொல்வதற்கில்லை.

**Sri A. MARIAPPAN** : சேலம் மாவட்டத்தில் கைத்தறியாளர்கள் அதிகமாக இருப்பதினால் சேலம் ஜில்லாவுக்கு அதிகப்படியான ஸ்பின்டில்களை ஒதுக்குவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அதற்காகத்தான் கூட்டுறவு முறையில் ஒரு மில் சேலம் ஜில்லாவில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

*Rural Industrial Estates*

***33 Q.—Sri S. M. ANNAMALAI** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் கிராமிய தொழில் பள்ளிகள் ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) இப்படியானால் வட ஆற்காடு மாவட்டத்தில் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கப்படும் ?